# நெஞ்சில் நிறுத்துங்கள்

தொகுப்பு :

கவிஞர் சுரதா

சுரதா பதிப்பகம்

56-அ, டாக்டர் லட்சுமணசாமி முதலியார் சாலை,

கலைஞர் கருணாநிதி நகர்,

சென்னை-600078

# உதடுகள்

பழைய தலைமுறையினர் எழுதிய கவிதைகளையும், சிறந்த கட்டுரைகளையும் தொகுத்து வெளியிட வேண்டும் என்ற எண்ணம், எனக்கு மிக நீண்ட காலமாகவே உண்டு. அந்த எண்ணம் இன்று தான் நிறைவேறியிருக்கிறது.

கவிதைகளைத் தொடுக்கக் கூடிய நான், பிறர் கட்டுரைகளைத் தொகுப்பதிலும் இப்போது ஈடுபட்டுள்ளேன்.

தொடுப்பவன், தன் திறமையை வெளிப்படுத்துகிறான். தொகுப்பவன், பிறர் திறமையை வெளிப்படுத்துகிறான்.

தமிழும் தமிழிலக்கியமும் வளரவேண்டுமானல், தொடுக்கவும் வேண்டும்; பிறர் கருத்துக்களைத் தொகுத்து வெளியிடவும் வேண்டும்.

இப்போது நான் இரண்டாவது காரியத்தைச் செய்திருக்கிறேன்.

இந்நூலில் உள்ள செய்திகளை நீங்கள் நெஞ்சில் நிறுத்தவேண்டும் என்பதற்காகவே இந்நூலுக்கு நான் 'நெஞ்சில் நிறுத்துங்கள்' என்று பெயரிட்டுள்ளேன்.

'புறநானூறு' மிகப் பெரிய தொகுப்பு நூல். இது, மிகச் சிறிய தொகுப்பு நூல். இந்நூல் ஆராய்ச்சியாளர்க்குப் பெரிதும் பயன்படும் என்றே கருதுகிறேன்.

சுரதா

[“வெள்ளையனே வெளியேறு” என்று 18-ஆம் நூற்றாண்டிலேயே குரல் கொடுத்தவர் மன்னர் மருது பாண்டியர். அவர் ஒரு சேர்வைக்காரர். ஒளி பொருந்திய பார்வைக்காரர். இரவு நேரங்களில் அவர் ஒரு வேர்வைக்காரர்.

அவருடைய ஆட்சியில், தமிழ் தழைத்துக் கொண்டே இருந்தது. வீரம் விழித்துக்கொண்டே இருந்தது.

பகைவர்களின் சூழ்ச்சியினால், அவர் பதவியிழந்து, பட்டமிழந்து, சிறிய மறவர் நாடாகிய சிவகங்கைச் சீமையை இழந்து, காளையார் கோயிலை அடுத்துள்ள அடர்ந்த காடுகளில் தலைமறைவாக இருந்து வருகையில், ஒருநாள் ஒரு புளிய மரத்தடியில் சிறுநீர் கழித்துக் கொண்டிருக்கும்போது பிடிபட்டு, 1801-ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 10-ஆம் நாள் தூக்கிலிடப்பட்டார். தூக்கிலிடப்படுவதற்கு முன்னர், அவர் மரணவாக்குமூலம் அளித்ததாகக் கூறப்படுகிறது.

கிழக்கிந்தியக் கும்பினியாரின் சேனாதிபதியான கலனல் அக்னியூ துரையின் முன்பாக, அவர் இந்த வாக்குமூலத்தைச் சொன்னதாகவும் சொல்லப்படுகிறது.]

# மருதுவின் மரண வாக்குமூலம்

என்னுடைய ஜமீன் வேலு நாச்சிக்குப் பாத்தியமாக இருந்தது. மேற்படியாளை நான் கலியாணஞ் செய்து கொண்டு, அவள் மூலமாக சிவகங்கை ஜமீனுக்குரிய உயில் சாசனம் பெற்றிருக்கிறேன்.

1773–ஆம் ஆண்டில் உயில் சாசனம் பெற்று, மாத்தூர் நவாபு அவர்களால் ஜமீனை ஜப்தி செய்து ஏலமாக்கிய பணத்தை நான் கட்டி ஏலத்தை நீக்கி அனுபவித்து வருகிறேன். என்னைத் தவிர வேறு யாரொருவருக்கும் இதில் பாத்தியமில்லை.

தேவஸ்தானம், பண்ணை, கொள்கிரயம், சோறு தேட்டு, ஆயம், சுங்கம், சாயவேல், உப்பளம் சத்திரங்கள் மடம் இவைகள் என்னால் கிரயத்துக்கு வாங்கப்பட்டன. நானே அனுபவித்து வருகிறேன். இந்தச் சொத்துக்களில் எல்லாம் யாருக்கும் எவ்விதமான பாத்தியமும் இல்லை. நானும் என் வாரிசுகளுமே என்றும் உரிமையான பாத்திய முடைய வர்கள்.

மேலே கண்ட சொத்துக்களை நான் என் சுயார்ச்சிதமாகக் கஷ்டப்பட்டுச் சம்பாதித்திருக்கிறேன். நான் பாஞ்சாலங் குறிச்சிக் கட்ட பொம்மு துரைக்கும் ஊமைத்துரைக்கும் உதவி செய்யவில்லை. இடம் கொடுக்கவும் இல்லை.

என்னால் கட்டப்பட்டிருக்கிற சத்திரங்களுக்கும் கோவில்களுக்கும் விடப்பட்டிருக்கிற தருமசாசனங்கள் மற்றவர்களுக்குக் கொடுத்திருக்கிற தஸ்தா வேஜுகளில் கண்ட சொத்துக்கள் யாவும் அவரவர்களே அனுபவிக்கும் படிச் செய்ய வேண்டும்.

என் தம்பி சின்ன மருது சேர்வைக்காரனுக்கும் எனக்கும் தாய் ஒருத்தி; தகப்பன்மார் இருவர். மேற்படி யானுக்கு ஜமீனில் யாதொரு பாத்தியமும் இல்லை. மேற்படியானை மானேஜராக வைத்திருந்தேன்; அவன் பாஞ்சாலங்குறிச்சி கட்டபொம்மு ஊமைத்துரைகளுக்கு அடைக்கலங் கொடுத்துக் காத்ததாகச் சொல்கிறதைத் தவிர, எனக்கு யாதொன்றும் தெரியாது.

நான் கிஸ்தி பாக்கியை நிறுத்தாமல் செலுத்தி வந்திருக்கிறேன். என் தம்பி சின்ன மருது சேர்வைக்காரனை மூன்று நாளைக்கு முன் தூக்கிலிட்டதால், என்னைத் தூக்காமல்

நிறுத்திவைக்கக் கூடாது. நான்யாதொருபாவமும் தெரியாத வனாக இருந்தும், கம்பெனியாருக்கு யாதொரு பொல்லாங்கும் செய்யாவதனாக இருந்தும், என்னை வலத் தொடையில் துப்பாக்கியினால் சுட்டு விட்டதனால் என்னையும் தூக்கிலிட வேண்டுவது அவசியமாயிருக்கிறது.

அப்படி செய்யாமை தரும சாஸ்திரத்திற்கு ஏற்காது. நான் கழுத்தில் கயிறு போட்டுக் கொள்கிறேன். சிவபெருமானே, கேட்கவும். கம்பெனியாரவர்கள் என்னை அநியாயமாய்த் தூக்குகிறபடியால், என்னுடைய ஜமீன் பூராச் சொத்துக்களையும் வேறே யாருக்காவது கொடுத்தாலும் "ஜமீனை ஆளுகிற எவர்களும் விருத்தியடையாமல் போவார்களாக! சிவபெருமானே, நீ வரங் கொடுக்க வேண்டும்.

என்னுடைய வாரிசுகளைத் தருவித்து என் ஜமீனைக் கொடுக்க வேண்டும். என்னுடைய ஜமீன் சொத்துக்களை யாவும் என் சந்ததிகளுக்குக் கொடுத்து விடுவதாகவும், நான் அமைத்திருக்கிற தரும நிலையங்களுக்கு நான் ஏற்படுத்தியிருக்கிற பிரகாரம் யாவும் ஒழுங்காக நடத்தி வருவதாகவும், நீங்கள் இப்பொழுது எனக்கு உறுதிமொழி தர வேண்டும். அதற்கு அத்தாட்சி யாகக் கவர்னமெண்டு கத்தியைப் போட்டுத் தாண்டி நீங்கள் சத்தியம் செய்து தரவேண்டும். இது சத்தியம்!

என் வாரிசுகளின் விவரம்: என் மனைவியின் பெயர் ராக்காத்தாள். அவள்தான் பட்டஸ்திரி. அவளுக்கு ஒரு மகன் உண்டு. பெயர் மருதாத்தாள்.

நானும் என் மூத்த சம்சாரமும் 'சிறுவயலில்' இருந்தோம். அவள் பிரசவத்திற்காக அவளுடைய தகப்பனார் ஊராகிய அரசனேந்தல் அரண்மனையில் போய் இருக்கிறாள். போய் மூன்று மாதமாகிறது.

இரண்டாம் மனைவி பெயர் கருப்பாயி ஆத்தாள். மேற்படியாளுக்கு 'கறுத்தையா' என்ற ஒரு மகனும் கண்ணாத்தாள் என்ற ஒரு பெண்ணும் உண்டு. இரண்டு பேருக்கும்

சந்ததியில்லை. அவள் மூத்தூர் அரண்மனையில் இருக்கிருள்.

மூன்றும் மனைவியின் பெயர் பொன்னுத்தாள். அவளுக்குச் சந்ததியில்லை.

நாலாம் மனைவியின் பெயர் ஆனந்திபாய். அவளுக்கு ஒரு பெண் குழந்தை யுண்டு.

ஐந்தாம் மனைவியின் பெயர் மீனுட்சி யாத்தாள். அவள் அந்நிய ஜாதி. அவளுக்கு ஒரு பெண் குழந்தை உண்டு. அவள் இப்பொழுது கவுண்டன் கோட்டை அரண்மனை யிலிருக்கிருள்.

எனக்கு சிவகங்கை ஜமீன் உயில் சாசனம் செய்து கொடுத்த முதல் மனைவி வேலு நாச்சி இறந்து ஒரு வருஷம் ஆகிறது. அவளுக்குச் சந்ததியில்லை.

என்னுடைய வாரிசுகளைக் கம்பெனியார்களாவது எனக்கு விரோதிகளாவது, யாதோர் இமிசையும் செய்யாமல் இருக்கும்படிக் கேட்டுக் கொள்கிறேன். முருகன் துணையாகவும் ஆகாச வாணி பூமாதேவி சாட்சியாகவும் நான் கழுத்தில் கயிறு போட்டுக் கொள்கிறேன்.

மேலே சொன்னபடி, நீங்கள் கத்தியைப் போட்டுச் சத்தியம் செய்து கொடுத்ததை நான் நேரில் பார்த்துக் கொண்டேன்.

இப்படிக்கு,

(ஒப்பம்) பெரிய மருது சேர்வை

[பாபர் 48-வது வயதிலும், பங்கிம் சந்திரர் 44-வது வயதிலும் காலமாயினர். காஞ்சிபுரம் பச்சையப்ப முதலியாரோ 40-வது வயதிலேயே காலமாகி விட்டார்.

கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகரைப் போல் அவர் 90-வயது வரையிலோ, ஈரோட்டுப் பெரியாரைப்போல் 94-வயது வரையிலோ உயிரோ டிருந்திருப்பாராயின் அவரால் நம் நாட்டுக்கு இன்னும் எத்தனையோ நன்மைகள் ஏற்பட்டிருக்கக் கூடும்.

நமது பச்சையப்பர் நாற்பதாண்டுகளே இவ் வுலகில் வாழ்ந்தவர் என்றாலும், அவர் நாற்பதா யிரம் ஆண்டுகளுக்கும் மேலாக நிலைத்திருக்கும் பெரும் புகழைப் பெற்றுவிட்டவர்.

அவர் மிகப்பெரும் பணக்காரர். அப்படி இருந் தும் பகட்டோ படாடோபமோ இன்றி எளிமை யாகவே வாழ்ந்தார். அவரது முதல் திருமணம் மிகவும் எளிய முறையில் நடைபெற்றதாம்.

அவர் அவ்வப்பொழுது பலருக்கு எழுதிய கடி தங்களில், இரண்டொன்றைத் தவிர மற்றவை இப் போது நமக்குக் கிடைக்கவில்லை. எனினும் 1794-ஆம் ஆண்டு மார்ச்சு 22-ல் அவர் எழுதிவைத்த இந்த உயில் மட்டும் எப்படியோ கிடைத்திருக் கிறது.]

# பச்சையப்ப முதலியாரின் உயில்

பிரமாதீசஷு பங்குனிமீ 12௨ கும்பகோணத்திலே நமக்கு சரீரம் சொஸ்தமில்லாமல் எதுவானாலும் அபாயங்கள் வந்ததானால் என் காரிய பாகங்கள் சகலமும் M. போனி நாராயண பிள்ளையவர்களும் அவர் குமாரன் அய்யாப்பிள்ளையவர்களும் பார்த்துக் கொள்ளுவது.

நானிதுவரைக்கும் சம்பாதித்ததிலே ஒரு லக்ஷம் வராகன் பணத்துக்கு லயமில்லாத இடத்திலே வட்டிக்குவைத்து அதிலே வருகிற வட்டியைக் காசி முதல் ராமேசுவரம் வரைக்கும் முன் நானெழுதியிருக்கிற ஸ்தலங்கள்தோறும் கட்டளை வைத்து அபிஷேக நைவேதனம் நடக்கும்படி பண்ணவும். சிதம்பரம் ஸ்ரீ சபாபதி கீழ்கோபுரம் கட்டி முடிகிறதற்கு இப்போது பூவாளுர் ஐயன்செட்டி மாரிபத்தில் பதினோராயிரத்து முந்நூறு வராகன் வைத்து வேலை நடந்து கொண்டு வருகிறதானபடியினாலே அந்தப் பணம் ஆய்ப் போனவுடனே, என் சொந்த ஆஸ்தியிலே முன் சிவதர்மத்துக்கு வைத்திருக்கிற லக்ஷம் வராகனை யல்லாமல் வேறே இருக்கிறதிலே, அந்தக் கோபுரத் திருப்பணி முடிகிறதற்குச் செல்லுமானது இருபதினாயிரம் முப்பதினாயிரம் வேண்டியதைக் கொடுத்து, கோபுரத்தைக் கட்டி முடித்துச் சிவ தருமத்தை நிறைவேற்றிப் போடவும்.

எங்கள் குருக்களையா வீடுகட்டிக் கொள்ளுகிறதற்கு ஆயிரம் வராகன் கொடுக்கவும். அவருக்கு நெல்லுக்கும் மனைச் செலவுக்கும் மனைவிருத்தி நடக்க வட்டிக்கு வைத்துக் கொள்ள ஆயிரம் வராகன் கொடுக்கவும். ஆக இரண்டாயிரம் வராகன் அகத்தியம் கொடுக்கவும்.

என்னண்டையிலே வெகு நாளாய் ராயச மெழுதிக் கொண்டிருந்த விநாயக மூர்த்தியா பிள்ளைக்கு மனைவிர்த்

திக்கும் சிவ பூசைக்கும் நடக்க வேண்டியதற்கு ஆயிரம் பூவராகன் வட்டிக்கு வைத்துக் கொள்ளச் சொல்லிக் கொடுக்கவும்.

திருவையாற்றிலே யிருக்கிற பண்டார சன்னிதி திருக் கூட்டங்களுக்கும், மயேசுர பூசை செலவுக்கும் ஆயிரத்தைந் நூறு பூவராகன் வட்டிக்கு வைத்து, அதிலே வருகிற வட்டியை மாதம் மாதம் உடனுக்குடனே மயேசுர பூசை செலவுக்குக் கொடுத்து வரவும்.

நான் இரண்டாம் விவாகம் பண்ணின வேதாரண்ணியத்துப் பெண்ணுக்குக் கொடுத்திருக்கிற நகை போக, பிறந்திருக்கிற பெண்ணுக்கு ஐந்தாறு வயது ஆன பிற்பாடு, அதற்குக் கல்யாணச் செலவுக்கும் நகை தட்டுமுட்டுக்கும் ஐயாயிரம் பொன்.........கொடுக்கவும்.

என்னுடைய உடன்பிறந்தாள் மகன் முத்தையா என்கிற புத்தியில்லாத பிள்ளையாண்டானுக்கு அவன் மனைவிர்த்தி நடப்பிவித்துக் கொள்ளுகிறதற்கு ஐயாயிரம் பூவராகன் எங்கேயாகிலும் வட்டிக்கு வைத்து அதில் வருகிற வட்டியை அவனுக்குக் கொடுக்கவும்............நாராயணப் பிள்ளை மகன் ஐயா பிள்ளைக்கும், அவர் குழந்தைகளுக்கும் பதினாயிரம் வராகன் ரொக்கம் கொடுக்கவும்.

இந்த மட்டும் செலவு போக, குறை யிருக்கிறதை எங்கள் தமக்கையாரும், என் பெரிய பெண்சாதியும் சொல்லுகிறபடிக்கு நாராயணப் பிள்ளையவர்கள் நடப்பித்து வரவேண்டும். நான் ஜீவந்தனா யிருக்கும்போது எங்கள் குருக்களையா, அண்ணா இராமலிங்கப் பிள்ளையவர்கள் அறிய விநாயகமூர்த்தி எழுதினது.

இப்படிக்கு,

**(Sd) கா. V. பச்சையப்பன்.**

(Sd) அண்ணாக் குருக்கள் அறிவேன்.
(Sd) ராமலிங்கம் அறிவேன்.

[இனிய குரலும், நினைவாற்றலும் எல்லோருக்குமே அமைந்து விடுவதில்லை. இவ்விரண்டையும் கருவிலிருந்துதான் பெற முடியுமே யன்றித் தெருவிலிருந்து யாரும் பெற முடியாது.

பிளாட்டோ, ஜூலியஸ் சீசர், ஆசாகிரே, ஆல்வாய் எடிசன், மெக்காலே, மகமது துக்ளக், வின்ஸ்டன் சர்ச்சில், விவேகானந்தர், பைரன், பால கங்காதர திலகர், மயில்வாகனப் புலவர், மாம்பழக் கவிராயர் முதலியோர் வியக்கத்தக்க நினைவாற்றலுடையவர்கள். அவர்களைப் போலவே நல்லூர் ஆறுமுக நாவலரும் அதிசயிக்கத்தக்க நினைவாற்றலுடையவர்.

இவர், துறவி ஆகாமலேயே ஒரு துறவியைப் போல் வாழ்ந்தவர். தமிழையும் சைவத்தையும் தம்மிரு கண்களாகக் கருதியும், பழந்தமிழ் நூல்கள் பலவற்றைப் பதிப்பித்தும், உரைநடையைப் புதுப்பித்தும், தம் சொந்தச் சிந்தனைகளைக் கொண்டே சொற்பொழிவாற்றியும் வந்தவர்.

இவர் முன்னிலையில் நின்றவர்கள் பலருண்டு. சொற்பொழிவில் இவரை வென்றவர்கள் யாருமில்லை.

ஆரம்பத்தில் குடித்தும் கூத்தடித்தும், அதற்கு பிறகு ஒழுக்கத்தோடு வாழ்ந்து, மக்களால் 'மகாத்மாக்கள்' என்று மதிக்கப்பட்ட ஒரு சிலரைப் போலல்லாமல், இவர் ஆரம்பத்திலிருந்தே ஒவ்வொரு நாளும் ஒழுக்கத்தோடு வாழ்ந்த உத்தமர். ஆகவே, இவர் ஒரு செங்கதிரைப் போன்றவர். அவர்களோ, செந்தீயைப் போன்றவர்கள்.

நெருப்பிலிருந்து தான் புகை வரும். நெருப்புச் சூரியனிலிருந்து புகையே வருவதில்லை அல்லவா?]

# ஆறுமுக நாவலரின் ஐந்து முடிவுகள்

நான் ஜயவருஷ (1834) முதலாகப் பீற்றர் பார்சிவல் துரையுடைய இங்கிலீஷ் வித்தியா சாலையிலேயே இங்கிலீஷ் கற்றேன். பிலவருஷ (1841) பார்சிவல் துரைக்குத் தமிழ்ப் பண்டிதனுயினேன்.

பிதிரார்ச்சிதம் நான் பெறவில்லை; என்னுடைய தமையன்மார்கள் நால்வரும் இயன்றமட்டும் பொருளும் உத்தியோகமும் உடையவர்களாயிருப்பவும், அவர்கள் பொருளுதவியும் நான் பெறவில்லை.

இங்ஙனமாகவும், மேற் கூறப்பட்ட விருத்தியை நான் கீலகவருஷ புரட்டாசிமீ (1848) பரித்தியாகஞ் செய்தேன். பார்சிவல் துரை "நான் தங்களுக்கு உயர்வாகிய வேதனம் தருவேன்; தாங்கள் என்னை விடலாகாது" என்று பலதரம் வற்புறுத்திச் சொல்லிய வழியும், நான் அவ்விருத்தியில் விருப்பம் வைக்கவில்லை.

நான் இங்கிலீஷிலே அற்ப விற்பத்தியாயினும் பெற்றிருந்தும், என்னோடு இங்கிலீஷ் கற்றவர்களுள்ளும் எனக்குப் பின் இங்கிலீஷ் கற்றவர்களுள் அநேகர் தங்கள் தங்கள் சத்திக்கேற்ற உத்தியோகம் பெற்று வாழ்ந்திருக்கக் கண்டும், நானும் என் சத்திக்கேற்ற உத்தியோகத்தின் பொருட்டு முயற்சி செய்யின் அது தப்பாது சித்திக்கும் என்றறிந்தும், அஃதில்லாமையால் விளையும் அவமதிப்பைப் பார்த்தும், உத்தியோகத்தை விரும்பவில்லை.

தமிழ்க் கல்வித் துணைமாத்திரங் கொண்டு செய்யப்படும் உத்தியோகம் வலிய வாய்த்தபொழுதும், அதையும் நான் விரும்பவில்லை.

கன்னியை, நாயகனிடத்து ஒரு துட்டாயினும் வாங்காது, வீடு விளைநிலம் தோட்டம் ஆபரணம் முதலியவற்றோடு விவாகஞ் செய்துகொடுக்கும் வழக்கமே யுடையது

என் சென்ம தேசமாகவும், நான் இல்வாழ்க்கையிலே புக வில்லை. இவைகளெல்லாவற்றிற்குங் காரணம் சைவ சமயத்தையும் அதன் வளர்ச்சிக்குக் கருவாகிய கல்வியையும் வளர்த்தல் வேண்டும் என்னும் பேராசையேயாம்.

இப் பேராசையினுல் இருபது வருஷ காலம் நான் செய்த முயற்சிகள் பல; அவைகளுள்ளே சித்தி பெற்றவை மிகச் சில.

சைவ சமயிகள் யாவரும் சைவ சமயத்திலே சிரத்தையுடையவர்களாகித் தங்கள் தங்களால் இயன்ற உதவி செய்தார்களாயின் நான் எடுத்த முயற்சிகளெல்லாம் இதற்கு முன்னரே நிறைவேறிவிடும்; நிறைவேறின், என்னைப் போலவே பிறரும் அங்கங்கே நன்முயற்சிகளைச் செய்வார்கள்; செய்யிற் கல்வியும் சமயமும் தழைத்தோங்கும்.

நல்லூர் க. ஆறுமுக நாவலர்.

(1868)

[இராமலிங்க அடிகள், பெரும்பாலும் பசித்திருந்தார்; அடிக்கடி தனித்திருந்தார்; வேண்டும் போதெல்லாம் விழித்திருந்தார்.

பசித்திருக்கையில், அவர் ஏழைகளின் பசியை உணர்ந்தார். தனித்திருக்கையில், அவர் தன்னையறிந்தின்பமுற்றார். விழித்திருக்கையில், இனிய பாடல்கள் பலவற்றைப் பாடினார்.

இவரது பக்திப்பாடல்கள், தேவார திருவாசகத்தைக் காட்டிலும், கனிவிலும் முதிர்ச்சியிலும் இரக்கத்திலும் மிகச் சிறந்து விளங்கும் பாடல்களாகும்.

இவரது கடவுள் கருத்துக்கள், போகப் போகப் பயன் படாமற் போனாலும் போகலாம், ஆனால் இவருடைய சன்மார்க்கச் சிந்தனைகள், எக்காலத்தும் எல்லோருக்கும் பயன்படும்.

கண் வழியாகவும், காது வழியாகவும், மூக்கு வழியாகவும், வாய் வழியாகவும், மயிர்க்கால் வழியாகவும், ஆசனவாய் வழியாகவும் உயிர் நீங்கும் மெனச்சொல்லுவார்கள். ஞானிகளுக்குக் கபாலம் விண்டு உயிர் நீங்குமாம்.

வள்ளலார் மிகச் சிறந்த ஞானியாதலால், இவருயிர் கபாலம்விண்டுதான் நீங்கியிருக்க வேண்டும்.]

# வள்ளலாரின் விளக்கப் பத்திரிகை

உ

திருச்சிற்றம்பலம்

அன்புடைய நம்மவர்களுக்கு வந்தனம்.

இன்று தொடங்கி சபைக்கு சமரச சுத்த சன்மார்க்க சத்திய ஞானசபை யென்றும்; சாலைக்கு சமரச சுத்த சன் மார்க்க சத்திய தருமச்சாலை யென்றும்; சங்கத்திற்கு சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கமென்றும் திருப்பெயர் வழங் குதல் வேண்டும்.

இன்று தொடங்கி அருட்பெருஞ்சோதி ஆண்டவரது அருட்பெருஞ்சித்தி வெளிப்படும் வரைக்கும் ஞான சபைக் குள்ளே தகரக் கண்ணாடி விளக்கு வைத்தல் வேண்டும். பித்தளை முதலியவற்றாற் செய்த குத்துவிளக்கு வேண்டாம். மேலேற்றுகிற குளோப்பு முதலிய விளக்குகளும் வேண்டாம். தகரக் கண்ணாடி விளக்கு வைக்குங் காலத்தில் தகுதியுள்ள நம்மவர்கள் தேகசுத்தி கரணசுத்தி யுடையவர்களாய் திருவா யிற்படிப்புறத்திலிருந்துகொண்டு விளக்கேற்றி பன்னி ரண்டு வயதிற்கு உட்பட்ட சிறுவர்கையிற் கொடுத்தாவது, எழுபத்திரண்டு வயதிற்கு மேற்பட்ட பெரியர் கையிற் கொடுத்தாவது உட்புற வாயில்களுக்குச் சமீபங்களில் வைத்துவரச் செய்விக்கவேண்டும். நாலு நாளைக்கு ஒரு விசை, காலையில் மேற்குறித்த சிறியரைக் கொண்டாயினும் பெரியரைக் கொண்டாயினும் உள்ளே தூசு துடைப்பிக்க வேண்டும். தூசு துடைக்கப் புகும்போது நீராடி சுத்த தேகத்தோடு கால்களில் வத்திரம் சுற்றிக்கொண்டு புகுந்து முட்டிக் காலிட்டுக் கொண்டு தூசு துடைக்கச் செய் விக்கவேண்டும். விளக்கு வைக்கின்றபோதும் இங்ஙனமே

செய்விக்க வேண்டும். விளக்கு வைத்தற்கும் தூசு துடைத்தற்கும் தொடங்குகின்ற பன்னிரண்டு வயதிற்குட்பட்ட சிறுவரும் எழுபத்திரண்டு வயதிற்கு மேற்பட்ட பெரியரும் பொருள் இடம் போகம் முதலியவற்றில் சிறிதும் இச்சை இல்லாதவர்களாய் தெய்வ நினைப்புள்ளவர்களாய் அன்புடையவர்களா யிருத்தல் வேண்டும். விளக்கு வைக்கும் போதும் தூசு துடைக்கும்போதும் நம்மவர்களில் நேர்ந்தவர்கள் புறத்தில் நின்று பரிசுத்தராய் மெல்லெனத் துதி செய்தல் வேண்டும். யாவரும் யாதொரு காரியம் குறித்தும் தூற்காலம் உள்ளே போதல் கூடாது. ஞானசபைத் திறவுகோல் ஒருவர் கையிலும் வெளிப்பட விருக்கப்படாது. அத்திறவு கோலை வேறொரு பெட்டிக்குள் வைத்து அப்பெட்டியைப் பூட்டி அப்பெட்டியைப் பொற்சபைக்குள் வைத்து அப்பெட்டித் திறவுகோலை ஆஸ்தானக் காவல் உத்தரவாதியாயிருக்கின்றவர் கையில் ஒப்புவித்தல் வேண்டும்.

தொடர்ச்சி காலம்நேர்ந்த தருணம் எழுதுகிறேன்.

இங்ஙனம்,

சிதம்பரம்

இராமலிங்கம்.

ஆங்கீரச ஞூ

ஆடி மீ ருவ

(18—7—1872)

[ஒரு பொருளைக் கையில் தூக்கியபடியே அதன் எடையைக் கூறும் சாமர்த்தியசாலிகள் உண்டு. அதே மாதிரி, ஒரு மனிதனை ஒரே பார்வையால் அளந்தெடுத்துவிடும் விவேகிகளும் இருக்கிறார்கள்.

அப்படிப்பட்ட விவேகிகளுள் ஒருவராகவும், அவசரப்படாத அரசியல்வாதியாகவும், சென்ற நூற்றாண்டில் சிறந்து விளங்கியவர் சேலம் பகடாலு நரசிம்மலு நாயுடு என்பவர்.

இவர், தமிழ், தெலுங்கு, வடமொழி, ஆங்கிலம் ஆகிய நான்கு மொழிகளிலும் நன்றாகப் பேசவும், எழுதவும் வல்லமை பெற்றவர்.

1889-ஆம் ஆண்டில் வெளிவந்த 'திவ்விய தேச யாத்திரை' என்னும் இவரது பயண நூலே, தமிழகத்தில் முதன் முதலில் வெளிவந்த பயண நூலாகும். அது, நமக்கு மிகவும் பயனுள்ள நூலுமாகும்.

இவர். தம் சொத்துக்களையெல்லாம் மனைவி மக்களுக்கோ, அண்ணன் தம்பிக்கோ, எழுதிவைக்காமல், அறக்கட்டளைக்கே எழுதி வைத்தவர். கோவையில் இவர் நிறுவிய பிரம்ம சமாஜப் பெண் பாடசாலை இன்றும் நடைபெற்று வருகிறது.]

# நரசிமலு நாயுடுவின் நாட்குறிப்பு

1885ஸு டிசம்பர் மீ 27, 28, 29, 30-ம் தேதிகளில் பொம்பாய் பட்டணத்தில் கூடும் முதல் காங்கிரசு சபைக்கு எம்மைக் கோயமுத்தூர் பிரதிநிதியாகக் குடிகள் தெரிந்தெடுத்து நியமித்தபடியால் 1885 ஸு டிசம்பர் மீ 24ம் தேதி மாலை சென்னையிலிருந்து ஷை காங்கிரசு சபைக்குப் புறப்பட மகாராஜராஜஸ்ரீகளாகிய, இரங்கய்ய நாயடவர்கள்,

ஹானரெபில் சுப்பிரமணிய ஐயரவர்கள், திவான் பகதூர் இரகுநாத ராயரவர்கள், ராய்பகதூர் அனந்தாசார்லு முதலான இருபத்தொருவருடன் நாமும் சென்னையிலிருந்து ரெய்ச்சூர் வரைக்கும் 5 ரூபாய் சிலவானங்கொடுத்து மூன்றாவது வகுப்பு வண்டியேறியதில் போதுமான சவுக்கிய மில்லாமையால், ரெய்ச்சூரிலிருந்து ரூபா 26—14—0 கொடுத்து இரண்டாவது வகுப்பு வண்டியேறிப் போனோம்.

இடையில் மகாராஜராஜஸ்ரீகளாகிய திவான் பகதூர் இரகுநாத ராயரவர்களுடையவும், ராய்பகதூர் சபாபதி முதலியாரவர்களுடையவும் சகாயத்தினால் நல்ல போஜன மும் தின்பண்டங்களும் கிடைக்கப்பெற்றோம். டிசம்பர் மீ 26-ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை பகல் சுமார் 12 மணிக்கு பொம்பாயைச் சேர, அங்கு ஆனரெபில் காசிநாத் திம்பக் திலாங்கு, ஆனரெபில் ஹியூம் முதலானவர்கள் எங்களை மரியாதையுடன் அழைத்துக்கொண்டுபோய் கோகுலதாஸ் தாஜிபால் என்பவருடைய சிங்கார மாளிகையில் விட்டு போஜன முதலானதுகளைக் கொடுத்து மரியாதை செய்தார்கள்.

அந்தத் திருமாளிகை ஸ்ரீமான் சேட் கோகுலதாஸ் தாஜிபால் என்னும் தரும பிரபுவின் சொந்தமானது. அந்தப் பிரபுவானவர் கோடீசுவரராக விருந்தபடியால், தம் பந்து மித்திரர்களுக்குக் கொடுக்க வேண்டிய சொத்துக்களைக் கொடுத்து மீதியான திரவியத்தில் ஏழை போஜன கல்விச் சாலைக்கு 160000 ரூபாய், பதிய விதந்து போஷணைக்கு 50000 ரூ, பதிய பேதைப் பெண்கள் விவாகத்துக்கு 25000 ரூ, பதிய அனாதிப் பிணங்களை அடக்கஞ் செய்ய 5000 ரூ, பதிய அனாதிப் பிணங்கள் கருமாந்திர பண்டுக்காக 50000 ரூ, பதிய பேதைப் பிள்ளைகளுக்கு உதவிப் பண்டு 25000 ரூ, செமினெரி பள்ளிக் கூடத்துக்கு 20000 ரூ, அங்கிலோவர்னகுலர் ஸ்கூலுக்கு 20000 ரூ, ஸமஸ்கிருத காலேஜுக்கு 80000 ரூ, பெண் கல்விச் சாலைக்கு 40000 ரூ, வாலிபப் பெண்கள் பண்டு 4000 ரூ, குஞ்சுமாதேவி ஸமஸ்கிருத கூலி 30000 ரூ,

குஞ்சுமாதேவி இங்கிலீஷ் கல்விக்கு 50000 ரூ, ஜாகோ கல்வி பண்டு 10000 ரூ, கோதார ஸ்கூல் பண்டுக்கு 10000 ரூ, நாலிய ஸ்கூல் பண்டுக்கு 10000 ரூ, தரும வைத்தியம் வக்கீல் பண்டுக்கு 50000 ரூ. ஜமனுபாய் தரும பண்டுக்கு 20000 ரூ, மீனாட்சி பாய் பண்டுக்கு 20000 ரூ, லக்ஷ்மிநாராயண தருமம் 20000 ரூ, மாருஸ்ரீ கங்காபாய் தருமம் 24000 ரூ, தரும கட்டிடங்கள் 3,00,000 ரூ, பின்னும் பலவித தருமங்களுக்கும் சேர்ந்து 17, 59, 188—8—10 செலவிட்டிருக்கிறார். இந்தத் தரும பண்டில் சேர்ந்ததுதான் நாங்கள் தங்கிய மாளிகை.

இந்த மாளிகையின் பெருமையை யென்னவென்று சொல்லுவோம். இந்த மாளிகையின் மத்திய ஹால் நீண்டு அகன்று ஆயிரக்கணக்காக ஜனங்கள் தங்கும்படியான விசாலமுள்ள மண்டபம். இந்த ஹாலுக்கு வலது பாகத்திலும், இடது பாகத்திலும் நூற்றுக் கணக்கான ஜனங்கள் தங்கும்படியான ஹால்களிருக்கின்றன.

இந்த ஹாலுக்கு மேல் மூன்றடுக்கு மெத்தையும் ஹால்களுமிருக்கின்றன. ஹாலுக்கு எதிரில் மானசம் பம்பாதீர்த்தங்களைப் போன்ற ஓர் தடாகமிருக்கிறது. இந்த மாளிகையே சற்று உன்னதமான மலைமேட்டின் பேரில் கட்டப்பட்டிருப்பதினால் மாளிகையைச் சுற்றிலும் தேவேந்திர வனத்தைப் போன்ற பற்பல புஷ்பச் செடிகளும், மா, வாழை, தென்னை, பலா, பொமனிமாஸ், கொய்யா, கிச்சிலி, முதலான பழந்தரும் விருக்ஷங்கள் கொப்புங் கிளைகளாலும் அடர்ந்து படர்ந்து அவற்றின் கனிகள் பெருத்துப் பழுத்துப் பிடுங்குபவரற்றுத் தொங்கி ஆடிக்கொண்டிருக்கின்றன.

இடைக்கிடை திவ்யமான ஆவி கூபங்கள் அழகாகப் பிரகாசிக்கின்றன. அதற்கப்புறம் விஸ்தாரமான காலிஜாகாவும் கக்கூஸ் முதலானதுகளும் சுத்தமாக வைக்கப்பட்டிருக்கின்றன. தண்ணீர்க் குழாய்கள் எப்போதும் ஜோவென்று கூவிக்கொண்டு திவ்யமான ஜலத்தைக் கொட்டிக் கொண்டே இருக்கின்றன. மாளிகையின் மத்திய ஹாலின் சுவர்கள் ஸ்படிகக் கற்களால் கட்டியதைப் போலிருந்த

தன்றியில், அநேக ஆயிரம் பெயர் ஏக காலத்தில் தங்கும் படியாக ஒரேவிதமான நூற்றுக் கணக்கான நாற்காலி களையும் பிரம்மாண்டமான மேசைகளையும் பல வர்ணப் பட்டு சோப்பாக்களையும் போட்டிருந்தன. அடியில் பளிங் குக்கல் தரையின்பேரில் போட்டிருந்த பலவர்ண இரத்தினக் கம்பளங்கள் மஹம்மல்லிலும் உயர்ந்ததென்று சொல்ல வேண்டும்.

இந்த இரத்தினக் கம்பளங்களுக்கே அநேக ஆயிரம் ரூபாய் விலையிருக்கலாம். ஹால்களின்மேல் பலவித வர்ணங் களும், பலவித கிளைகளுமுள்ள குலோப் லக்ஷடர்களைக் கட்டி இராக் காலங்களில் அவைகளில் விளக்குகளை வைக்கவே அந்த மாளிகையே ஜகஜ்ஜோதியாக விளங்கித் தேவலோகம் போலிருந்தது.

நாங்கள் யாவரும் தேவலோகத்தில் சொர்க்காதி பதவி களை யனுபவிப்பவர்களாகவே மதித்துவிட்டோம். மேலும் அந்த தேவர் சபைக்குப் பிரதிநிதிகளாகப்போன எம்மவர் ஒவ்வொருவருக்கும் சயனிப்பதற்கு மெத்தை, ஜாலரை, அஸ்மானகிரி, துப்பட்டியுள்பட சுத்தியும் சுகமுமான கட்டிலும், அருகிலொரு மேசையும், அதன்பேரில் பலவித கடிதங்களும், கவர்களும், பேனுக்களும், பென்சல்களும், பலவித இங்கிப் புட்டிகளும், முகம் பார்க்கக் கண்ணுடி களும், படிப்பதற்குப் புது நூஸ் பேபர்களும் வைக்கப்பட்டி ருந்த தன்றியில், நான்கு நாற்காலிகளும், ஒரு டீபாயும், அந்த டீயாயின் பேரில் முகந்துடைக்கச் சுத்தமான துவாலை யும், கால் கைகள் துடைக்க முரட்டுத் துவாலையும், பால், காபி முதலானவைகளைச் சாப்பிடக் கோப்பைகளும், லோட்டாக்களும், கிராம்பு முதலானவைகள் கூடிய ஏலம் தாம்பூலம் முதலானதுகளும் வைக்கப்பட்டிருந்தன.

இம்மட்டோ! சுத்திர கடாயில் சுடுஜலம் எப்போதும் தயாராகக் காய்ந்துகொண்டே யிருந்தன. குளிர்ந்த ஜலம் வேண்டியவர்களுக்குக் குளிர்ந்த ஜலமும், அழுக்கை நீக்க

உயர்ந்த சோப்புக் கட்டிகளும், ஸ்நானம் செய்து வைக்க வேலைக்காரர்களும், தயாராக இடுப்பைக் கட்டிக்கொண்டே தயாராக யிருந்தார்கள். இப்படி ஸ்நானம் செய்பவர்கள் இஷ்டப் பிரகாரமெல்லாம் ஜலமாட நடைபாவியும் கட்டி யிருக்கிறார்கள். இவ்விதமாக ஸ்நானம் செய்துவிட்டுச் சாப்பாட்டிற்குப் போனால், அந்தச் சமையல் கட்டிடத்தின் விஸ்தீரணத்தையும் சொகுசையும் வசதியையும் சொல்லவும் வேண்டுமோ!

போனவர்களுக் கெல்லாம் பிரம்மாண்டமான வாழை இலைகளைப் போட்டுப் பலவித லட்டுகள், பேணிகள், தூடுபேடா, பாலோட நெய்யோட பிருஞ்சுகள், பலவித கனிவர்க்கங்களுடன் கூடை கூடையாக வட்டிப் பதன்றியில், திவ்யமான அரிசிச் சாதத்தையும், மோர் சாம்பார், பலவித சட்னிகள், காய்கறிகள், கட்டித் தயிர், பால், பாயசம் முதலானவைகளைக் கணக்கு வழக்கின்றிக் கொட்டிக் கொண்டே யிருந்தார்கள். எங்களுக்குக் குஜராத்தி, மராட்டி, இந்துஸ்தானி முதலான அத்தேசத்து பாஷைகள் அடியோடு தெரியாதென்று கண்டு, அத்தேயத்து அந்த பாஷைகள் தெரிந்த பி. ஏ., முதலான பரிஷைகளைக் கொடுத்த பி. ஏ., பட்டம் பெற்றவர்கள் எங்களுக்கருகில் இடுப்பைக் கட்டிக் கொண்டு நின்று எங்களுக்கு எது வேண்டுமென்று சொல்லுகிறோமோ அதைச் சொல்லி வாய் மூடுமுன் உடனுக்குடனே சொல்லியும், செய்வித்தும் கொடுத்துக் கொண்டு யாதொரு குறைவுக்கும் வழியில்லா மல் கவனமாகக் காரியத்தை நடப்பித்து வந்தார்கள்.

சாப்பிட்டானவுடனே சுருட்டுப் பிடிப்போருக்குச் சுருட்டும், உக்கா பிடிப்போருக்கு உக்காவும், தாம்பூலம் போடப்பட்டவர்களுக்குத் தாம்பூலமும் சித்தஞ்செய்து கொண்டு வந்தார்கள். இதன்றியில் க்ஷவரம் செய்து கொள் பவர்களுக்குத் தயாராக மாசுநிப்போர்களும் வெளியில் போகவேண்டுமானால் குதிரைகள் கட்டிய சாரட்டுகளும், சோச்சுகளும் தயார் செய்யப்பட்டிருந்தன. விருந்தாளி

களாகிய எங்களுக்கு இவ்வித மரியாதைகள் செய்வித்தவர்கள் யாவரெனில், இந்த மஹாநாட்டுக்குப் பொம்பாய் பிரதிநிதிகளாக நின்ற கனவான்களே.

அவர்கள் யாவரெனில், சட்ட நிருபண சபையின் மெம்பராகிய கனம் பொருந்திய தாதாபாய் நவரோஜீ, சட்ட நிருபண சபையின் மெம்பரும் எம். ஏ., பி. எல்.; பட்டதாரியும், பகவத் கீதையை இங்கிலீஷ் கவிகளில் மொழி பெயர்த்தவரும், கனம் பொருந்திய காசிநாத் டிம்பக் திலாங்கு, பாம்பே முனிசிபல் பிரசிடெண்டும் பாரிஸ்டருமாகிய மெஸர்ஸ் பொரோஜசா மெர்வாஞ்சி மீட்டா, பொம்பாய் பிரசிடென்சி சபையின் காரியதரிசி டின்ஷாஜி, வாட்ஸா, ஐகோர்ட்டு சொலிசிட்டர் டின்ஷாஜி பெஸடோன்ஜி காங்கா, ஐகோர்ட்டு வக்கீலாகிய காநக்ஷாம், நீலக்நாத் நாட்கார்னி, ஐகோர்ட்டு சொலிசிடர் மூல்ஜி பவானி தாஸ பார்பாயா, மகாவர்த்தகர்களாகிய திரிபுவனதாஸ், மங்கல்தாஸ் நாதுபாய், ஜிஹாங்கீர் பிவாச்சா, இராஜனி துலாம்சா, சொலிசிடரும், செரீபுமாகிய ஸயானிசா, பாரிஸ்டர் பால்மூங்சீல் வக்கீல், பாரிஸ்டர் ஏ. கே. சூக்ஞ, ஸபெக்டேடா பத்திரிகாசிரியர் பி. எம். மலபாரி, ஐகோர்ட் வக்கீல் காமிஸ்ராம சந்திரகிர்லோஸ்கர்.

சொலிசிடர், அப்துல்லா மெஹராலி தாராமசி, பெரிய வர்த்தகராகிய ஜவுரிலால் உமயசிங்கர்யாஜி பின்னும் அநேக பெரிய உத்தியோகஸ்தர்களும் வர்த்தகர்களும் இந்தக் கனவான்களுக்குப் பக்கத் துணையாக நின்று இந்தச் சபையை ஸ்தாபிக்கத் தூண்டினவர் மகரிஷியாக விருக்கும் மேஸ்டர் ஹூம் என்பவர்.

இவர் அநேக வருஷங்களாக இந்தியா கவரன்மெண்டு செகரிடெரியாக விருந்து இப்போது உபகாரச் சம்பளத்துடன் நமது தேசத்திலே தங்கி நம்மவருக்குதவி செய்ய கங்கணங் கட்டிக்கொண்டு இரவும் பகலும் நமது தேசத்தாருக்கு உதவி செய்வதே கருத்தாகக் கொண்டு வேண்டிய சாதனங்களைத் தேடி வருகிறார்.

இவருக்கு வயது 60க்கு மேலான போதிலும் பாலியனைப் போல சுருசுருப்புடன் வேலை செய்வதன்றியில் நமது தேசத்தாரின் பேரில் அவருக்கிருக்கும் அன்பை அளவிடப்படாது. இந்த மஹாத்மாவுக்கு அனுகூலமாக ஐகோர்ட்டு ஜட்ஜி சர் வில்லியம் வெட்டர்பர்ன் துரையவர்களும், மகாவித்வ சிரோன்மணியும், எலிபின்ஸ்டோன் காலேஜ் பிரதம பண்டிதருமாகிய பிரபஸர் வொர்ஸ்வர்த்து என்பவரும் முன் சொன்ன மகரிஷியைப் போலவே நமது தேசத்து ஜனங்களிடத்தில் அத்தியந்த கருணையுடையவராகி, நமக்காகப் பாடுபடும் பெருந்தன்மையை யென்னென்று சொல்லுவோம். சத்தியம், சாந்தம், தருமம், தயை முதலான குணங்களெல்லாம் திரண்டு உண்மையான உருவெடுத்த இந்தத் துரைமார்களுக்கு நிகரான வேறு துரைமார்களை எமது ஜன்மத்திற் கண்டதில்லை.

இப்படிப்பட்டவர்களுக்கு இடையில் பிரகாசிக்கும் கனம் பொருந்திய தாதாபாய் நவரோஜி யென்பவர் ஒரு மஹ்ரிஷி யென்றே சொல்லலாம். இவருக்கும் வயது 60க்கு மேலுண்டு. இவர் இங்கிலீஷ் பாஷையைப் பேசும் சாமர்த்தியத்தைச் சொல்லி முடியாது. இவர் இத்தேசத்து ஏழைக் குடிகளுடைய கஷ்டத்தை நீக்கவேண்டுமென்று கனவிலும் நனவிலும் கருத்தாகக் கொண்ட மஹாதாதா. இதற்கென்று ஆறு தடவை சீர்மைக்குப் போய் அவ்விடத்தில் துரைமார்களிடம் சண்டைப்போட்டும் அநேக திரவியத்தைச் செலவு செய்தும் வந்ததன்றியில், ஏழைக் குடிகளுக்காகக் கண்ணீர் விட்டழுப்பட்ட பரம புருஷர். இவருக்குத் தாதாபாய் என்ற பொருந்திய பெயர் இயற்கையாக யமைந்தது ஈசன் கருத்தாக விருக்கலாம்.

மேஸ்டர் பெரோஜஷா மெர்வாஞ்சி மீடா என்பவர், அதிக வருமானத்தையுடைய பாரிஸ்டராயிருப்பதன்றியில் அந்த பம்பாய் பட்டண முனிசிபாலிட்டியின் சபாநாயகராக விருந்த போதிலும், டம்பம் பெருமையென்பது கொஞ்சமுமற்றவர். இவர் பேசுவதில் மகா சமர்த்தர். இவரது சப்தம்

இடியிடிப்பதைப் போலிருக்கிறது. இவர் பேசும்போது எங்கும் நிசப்தமாக விருக்கிறது.

கனம்பொருந்திய காசிநாத் டிம்பக்திலாங்கு என்பவர் சுந்தர புருஷர். வாலிபராகினும் வித்தியா சாமர்த்தியமும் உன்னத பதவியையும் உடையவர். பிரபல பிரசங்கர். இவர் நாவாடினுல் நாடெல்லாம் ஆடும். இவரது கொஞ்சு மொழி களைக் கேட்கக் கேட்கக் குயில்களும் கிளிகளும் வெட்கும். எப்போதும் சுருசுரு பரபர வென்றுஓடி நாடி வேலையைச் செய்து கொண்டேயிருக்கிருர். இவர் சீக்கிரத்தில் இந்த இந்து தேசத்துக்கே ஓர் சிரோ பூஷணமாகப் பிரகாசிப்பா ரென்று சொல்லலாம்.

இவர்களன்றியில், கனம் பொருந்திய ரான்டெமல்பாரி, டாக்டர் ஆத்மராம் பண்டுரங்கு, சமஸ்கிருத பண்டிதர் இராமகிருஷ்ண பண்டார்கர் முதலானவர்களுடைய பெருமையை யென்னென்று சொல்வோம். இப்படிப்பட்ட கனவான்கள்தான் எங்களுக்கு முன் சொன்ன மரியாதைகள் செய்வித்தனர். இவ்வித மரியாதைகள் எங்களுக்கு மாத்திர மல்ல, எங்களைப் போலவே இந்த இந்தியா தேசத்தின் பல விடங்களிலிருந்து வந்த பல ஜாதி, பல மத பிரதிநிதி களுக்கும் இவ்விதமாகவே மரியாதை செய்வித்தார்கள். இனி எங்களைவிட வேறு விடங்களிலிருந்து அங்கு வந்த பிரதி நிதிகள் யாவரெனில்:—

குராச்சியிலிருந்து வந்த பிரதிநிதிகள் :— ஸ்ரீமான் டயராம் ஐதுமால் வக்கீல், ஸ்ரீமான் உடராம்மூல் வக்கீல்.

வீரமகம் என்னும் பட்டணத்திலிருந்து வந்த பிரதிநிதி:- மிஸ்டர் ஹரிலாம் மயராம், வக்கீலும் முனிசிபல் கமிஷ னரும்.

சூரத்திலிருந்து வந்த பிரதிநிதிகள்:—வக்கீலும் முனிசி பல் கமிஷனரும், பிரஜஹித் வர்த்தக சபையின் கமிட்டி

மெம்பருமாகிய மேஸ்தர் எச். எச். தர்வா பி. ஏ., பி. எல்., பிரஜஹித் வர்த்தக சபையின் காரியதரிசியாகிய தமஸ்தர் மஞ்சர்ஷா பல்லஞ்சி கெய்கோபாட் அவர்கள், வக்கீலும் முனிசிபல் கமிஷனருமாகிய மேஸ்தர் கோகுல்தாஸ் பைதாஸ் அவர்கள், மேஸ்தர் மஞ்ச சங்கர் ஜிவன்ராம் பி.ஏ. பி. எல்., அவர்கள், மேஸ்தர் ஹோசாஞ்சி பூஜர்ஜி பி. ஏ. பி. எல்:, பிளீடர் வர்த்தகரும் பிரிஜஹிர்தக சபையின் அக்கிராசனுதிபதியுமாகிய மேஸ்தர் நாரன்காஸ புருஷோத் தம தாஸ் அவர்கள்.

பூனுவிலிந்து வந்த பிரதிநிதிகள்:—பூனு சர்வஜனிக் சபையின் அக்கிராசனுதிபதியாகிய ராய்பஹதூர் கிருஷ்ணுஜி லெக்ஷ்மன் நுலகர், டிஸ்திரிக்ட் கோர்ட்டு பிளீடர் கங்கா ராம் பேரமாஸ்கி அவர்கள், நியான் பிரகாச பத்திரிகையின் மகாராஷ்டிர பாகத்துப் பத்திரிகாசிரியராகிய மேஸ்தர் ராமசந்திர மோரிஷ்வார்சேன், பூனு சர்வஜனிக் சபையின் கவுரதை காரியதரிசியும் மும்மாதத்துக்கு ஒருமுறை பிரசுரஞ் செய்யப்படும் பூனு சர்வஜனிக் சபையாரின் பத்திரி கையின் ஆசிரியருமான மேஸ்தர் சீதாராம் ஹரி சிப்ளாங்கர் அவர்கள், பூனு சர்வஜனிக் சபையின் காரியதரிசியாகிய மேஸ்தர் சிவராம் ஹேறிசேத், டாக்டர் பாண்டுராம் கோபால், ஜி. ஜி. எம். சி. பெர்குஷன் காலேஜ் ப்ரின்சிபாலும் புதிய இங்கிலீஷ ஸ்கூல் சூப்ரின் டெண்டுமாகிய மேஸ்தர் வாமன் சிவராம் அப்தி எம். ஏ. டிஸ்திரிக்ட்டு கோர்ட்டு ப்ளீடராகிய மேஸ்தர் இராமசந்திர கிஷாலிமாகி, பொகுஷன் காலேஜ் ப்ரொபெஸ மேஸ்தர் கோபால் காணிஷ் அசாகர்.

கல்கத்தாவிலிருந்து வந்த பிரதிநிதிகள்:—பிளீடரும் முனிசிபல் கமிஷனரும் நாசி என்னும் பத்திரிகையின் ஆசிரி யருமாகிய மேஸ்தர் பாப ஜெமேன்தாஸ், மேஸ்தர் பாபு ப்ராடயால் சௌதரி பிளீடர்.

காசியிலிருந்து வந்த பிரதிநிதி:—பென்ஷன் பெற்றுக் கொண்டு வேலையைவிட்டு நீங்கிய ஸப்—ஜட்ஜி யாகிய மேஸ்தர் ராம்காலி சௌத்ரி.

லக்னோவிலிருந்து வந்த பிரதிநிதிகள்:—ஹிந்துஸ்தானி பத்திரிகையின் சொந்தக்காரரான மேஸ்தர் முன்ஷி கங்கா பிரசாத் வர்மா, லார்டு கானிங் காலேஜ் உபாத்தியாயராக விருக்கும் மேஸ்தர் ப்ரணுத் பண்டித்.

லாகோரிலிருந்து வந்த பிரதிநிதிகள்:—பாபு முந்திலி தார், பிளீடர் பாபு சத்தியானந்த், ஹக்னி ஒத்திரி பிராமோ மிஷணரி.

அலகாபாத்திலிருந்து வந்த பிரதிநிதி:—மேஸ்தர் கோசால்.

ஆமதபாத்திலிருந்து வந்த பிரதிநிதிகள்:—வக்கீலும் முனிசிபல் கமிஷனருமாகிய மேஸ்தர் கிஷாலால் மோடிலால், மேஸ்தர் மஞேகஜிபி, மோடிவக்கீல் இன்னும் பல நாடுகளிலிருந்து பலர் வந்திருந்தார்கள்.

டிசம்பர் மீ 28 தேதி பகல் 12-மணிக்குக் காங்கிரெஸ் சபை கூட்டப்பட்டு, வங்காளத்திலிருந்து வந்த உமிஸ் சந்திர பனர்ஜி சபாநாயகராக நியமிக்கப்பட்டு, பின் வருகிற தீர்மானங்கள் செய்யப்பட்டன: அவையாவன.

1. இந்தியாவின் இராஜகீய காரியங்களை விசாரிக்கச் சீமையில் இராயல் கமிஷனை நியமிக்க வேண்டுமென்று கனம் சுப்பிரமணிஐயர் பிரேரேபிக்க, கனம் பெரோஜஷா மெட்டா ஆமோதிக்கச் சகலராலும் அங்கீகரித்துக்கொள்ளப் பட்டது.

2. சீர்மையிலிருக்கும் இந்தியா விசாரணைச் சங்கத்தை எடுத்துவிட வேண்டுமென்று ஸ்ரீ சிபலாங்கரால் பிரேரே பிக்க, ஸ்ரீ அநந்தாசார்லு அவர்களால் ஆமோதிக்கச் சகலராலும் அங்கீகரித்துக் கொள்ளப்பட்டது.

3. இந்தியா சட்ட நிரூபண சபையில், குடிகளால் தெரிந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளை வைத்துக்கொண்டு சட்டதிட்டங்களைச் செய்யவேண்டுமென்றும், சர்க்கார் வரவு செலவுக் கணக்குகளை அவர்கள் சம்மதியின்படி செய்ய வேண்டுமென்றும் கனம் காசி நாத்திரம்கதிலாலவர்களால் பிரேரேபிக்கப்பட்டு, கனம் சுப்பிரமணிய ஐயர் தாதாபாய் நவரோஜி அவர்களால் ஆமோதிக்கப்பட்டுச் சகலராலும் அங்கீகரித்துக் கொள்ளப்பட்டது.

4. கவினெண்டாண்டு சிவில் சர்வீசு பரிக்ஷை இந்து தேசத்திலேயும் நடத்தவேண்டுமென்றும் ஷை பரிக்ஷைக்குப் போகும் வயிதை 23 செய்யவேண்டுமென்றும் கனம் தாதாபாய் நவரோஜி அவர்களால் பிரேரேபிக்கப்பட்டு, ம-ள-ஸ்ரீ. வீரராகவாசாரியாரவர்களால் ஆமோதிக்கப்பட்டு சகலராலும் அங்கீகரித்துக் கொள்ளப்பட்டது.

மேலும், லைசென்சு டாக்ஸ் வரியை இன்கம்டாக்சு வரியாகப் போடவேண்டுமென்றும், சுதேசிகளை வாலின்டியர் கோரில் சேர்த்துக்கொள்ள சுதந்திரம் தரவேண்டுமென்றும், பர்மா தேசத்தை இத் தேசத்து வரவு செலவோடு சேர்க்கக் கூடாதென்றும் தீர்மானித்து அனைவராலும் அங்கீகரித்துக்கொள்ளப்பட்டது.

[புதுக்கோட்டை அரங்கசாமி பிள்ளை என்பவரே, சீவக சிந்தாமணியின் முதல் ஐந்து இலம்பகங்களை 1883-ல் முதன் முதலாகப் பதிப்பித்தவர். அவரது பதிப்பு வெளிவந்த பின்னரே, டாக்டர் உ. வே சாமிநாதையர் நூல் முழுதும் அடங்கிய பதிப்பினை 1887-ல் வெளியிட்டார்.

ஐயரின் பதிப்பில் பல பிழைகள் இருப்பதைக் கண்ட சுன்னுகம் முருகேச பண்டிதர் என்பவர் "சீவக சிந்தாமணி வழுப்பிரகரணம்" என்னும் கண்டன நூலொன்றை வெளியிடலானுர். பண்டிதரின் கண்டனம் சரியில்லையென்ருல், அதனைச் சாமிநாதையரே மறுத்திருக்கலாம். ஆனுல் அவர் அவ்வாறு செய்யாமல், தம் மாணவராகிய குடவாயில் சண்முகம் பிள்ளை என்பவரைக் கொண்டு அதற்கொரு கண்டன நூல் எழுதச் செய்தார். மறுப்புக்கு மறுப்பாக வெளிவந்த அந்நூலைக்கண்ட முருகேச பண்டிதர், உடனே இருவரையும் வெளிப்படையாகவே வாதுக் கழைத்தார்.

வாதுக் கழைத்தவரோ, மறைமலையடிகளாரைப் போல் ஒவ்வொரு நூலையும் எழுத்தெண்ணிப் படித்தவர். வித்துவான் தியாகராசச் செட்டியாரையே திகைக்க வைத்தவர். அவரிடம் அகப்பட்டுக் கொண்ட ஐயரும் அவருடைய மாணவரும், புலமைப் பஞ்சம் உடையவர்கள். எனவே, பாராயணப் பண்டிதராகிய உ. வே. சாமிநாதையரோ, பாதபூஜை செய்த சண்முகம் பிள்ளையோ அவரோடு வாதிட முன்வரவில்லை.

அவர்கள் வாதிட முன்வராமையால், சுன்னுகம் முருகேச பண்டிதர், கீழ்வரும் வாத விளம்பரத்தை 1888-ல் வெளியிட்டார். இவ்விளம்பரம், சென்ற நூற்றுண்டுப் புலவர்களுக்கிடையே நடைபெற்ற

"சீவக சிந்தாமணிச் சண்டை"யின் வெற்றி தோல்விகளை நமக்கறிவிக்கும் நல்லதோர் இலக்கியச் செய்தியாகும்.]

## முருகேச பிள்ளையின்
# வாத விளம்பரம்

"கும்பகோணம் காலேஜ் தமிழ்ப் பண்டிதராகிய ஸ்ரீமத் சாமிநாதையரவர்களாவது, அவர்களுடைய மாணுக்கராகிய குடவாயில் ஸ்ரீமான் ஐ. சண்முகம் பிள்ளையாவது, அவர்களைச் சார்ந்த பிறராவது **சீவக சிந்தாமணி வழுப்பிரகரணத் தூல்** காட்டிய பிழைகளைப் பிழைகளல்ல என்று தக்க நியாயத்தோடு அறிஞர்கள் பலர் கூடிய சபையில் திக்கரித்துக் காட்டுவார்களாகில், சிக்கி நாயக்கன் பேட்டை இராகவாச்சாரியர் அவர்களும் தமது நியாய வாதா பாச நிராகரணத்தில் தாம் ஒப்புக்கொண்டு காட்டிய நியாயங்களையும் ஓர் ஆக்ஷேபத்துக்குமிடமின்றி அச்சபையில் தக்க நியாயத்தோடு தாபித்துக் காட்டச் சித்தமாயிருக்கின்றார்.

"சீவக சிந்தாமணிப் பதிப்பிற் காட்டிய பிழைகளைப் பிழைகளென்றே யாம் ஒத்துக்கொண்டோம். இராகவாச்சாரியரே நியாய வாதா பாச நிராகரண நிறுப்புச் செய்திடுக" என்னினும் தக்கவர்கள் முன்னிலையில் அவ்வாறு செய்தலும் அவருக்குச் சம்மதிதான். ஆதலால் அபிப்பிராயத்தோடு பொது இடமும் நாளும் குறிக்க."

சர்வதாரி ஞு
ஐப்பசி மீ கசு
காஞ்சிபுரம், 1888

இங்ஙனம்,
**பூ. முருகேச பிள்ளை.**
(சந்திரபானு அச்சுக்கூடம்.)

[ஆங்கிலேயர்களின் ஆட்சி தென்னாட்டில் நிலை பெற்றபோது, தமிழர்களே முதன் முதலில் செல் வாக்குப் பெற்றிருந்தனர். கிழக்கிந்தியக் கம்பெனி யார் தென்னாட்டில் வர்த்தகசாலைகள் அமைத்த போது, அவர்களிடம் முதன் முதலில் நெருங்கிப் பழகியவர்கள் தமிழர்களே.

துபாஷிகளாகவும், தரகர்களாகவும் ஆங்கில வர்த்தகர்களின் நட்பைப் பெற்ற தமிழர்களுக்கு நாட்டிலே செல்வாக்குப் பெருகலாயிற்று. வர்த் தகர்களாயிருந்த ஆங்கிலேயரின் தேச நிர்வாகத் தில் தமிழர்களே நிர்வாக உத்தியோகஸ்தர்களாய் இருந்தனர். ஆகவே, ஆதிகாலத்தில் அரசியல் துறையில் முதலியார், நாயுடு, நாயக்கர், செட்டி யார், பிள்ளைமார் போன்றவர்களே இடம்பெற் றிருந்தனர். தமிழர்கள் இயல்பாகவே நிருவாகத் திறமை உடையவராகையினால் ஆங்கிலேயரின் நன் மதிப்பை வெகு எளிதில் பெற்றனர்.

அதுவரையில், ஆங்கிலேயர்களை மிலேச்சர்கள் என்றும், ஆங்கிலம் மிலேச்ச மொழியென்றும் கருதி ஒதுங்கியிருந்த ஒரு சிலர் அரசியலில் தமிழர்களின் ஆதிக்கமும், சமூக வாழ்வில் மதிப்பும் பெற்று வரு வது கண்டு, தாங்கள் இனியும் அவ்வாறு ஒதுங்கி இருந்தால் தங்கள் சமூகம் வீழ்ச்சியடைவது உறுதி யென உணர்ந்து அவசரம் அவசரமாக ஆங்கில மொழியைக் கற்கவும், ஆங்கிலேயரின் நட்பைப் பெறவும் முனைந்தனர்.

பின்னர் அவர்கள் ஆங்கிலக் கல்விப் பயிற்சியில் மிகமிக விரைவாக முன்னேறினர். சென்னை மாநில

அரசினர் கல்லூரி நிறுவப் பட்டபோது அவர்களே ஆதிக்கம் வகித்தனர்.

அதுமுதல், அரசியல் துறையிலும், பொதுவாழ் விலும் அவர்களின் ஆதிக்கம் பெருகலாயிற்று. தமது சமூக நலனைக் காப்பாற்றிக் கொள்ளும் பொருட்டுத் தமக்குச் சொந்தமாக பத்திரிகைகளும் தோற்றுவித்துக் கொண்டனர். அவர்கள் வளர, வளரத் தமிழர்களின் நிலை மிகவும் சீர்குலையத் தொடங்கிற்று.

தமிழர்களுக்கு ஏற்பட்ட இத்தகைய வீழ்ச்சி யைக் கண்டு வருந்தியவர்களில் காரைக்கால் ராஜகோபால பிள்ளை என்பவரும் ஒருவர்.

அவர், தமிழ்களின் நலனைக் கருத்தில் கொண்டு, இங்கிலீஷ் தமிழ்ப் பாடசாலையொன்றை காரைக் காலில் நிறுவியவர். ஏழை மாணவர்களுக்கு இல வசக் கல்வி வழங்கும் திட்டத்தை 1890-ஆம் ஆண் லேயே கொண்டு வந்தவர்.]

# காரைக்கால் இராசகோபால பிள்ளையின் கல்வி அறிக்கை

1. சகல தருமங்களிலும் வித்தியாதருமமே மேலான தென்று என்னூலும் முறையிடுவதால் அத்தருமத்தை இவ் வூர் கனதனவான்கள் விருத்தி செய்யப் பின்னடையாமல் ஊர்ச்சிதப்படுத்துவார்களென்கிற நம்பிக்கையின்பேரில் இக் காரைமா நகரில் "ஹிந்து ரிலிஜியஸ் ஸ்கூல்" என்னுமோர் பாடசாலை 1890 ஞு மார்ச்சு மீ 17உ யிலேற்பட்டு நடை பெற்று வருகின்றது.

2. இவ்வூருக்கயலிலுள்ள தேசம் பெரும்பாலும் இங்கி லீஷ் இலாகாவாயிருப்பதால் இவ்வூர் பிள்ளைகள் அநேகர்

இங்கிலீஷ் பாஷை படித்துத் தேறுவார்களானல் மிகுந்த கீர்த்தியும் செல்வமும் அடைவார்கள் ளென்பதற்குச்சந்தேக மில்லை. அன்றியும், பிரான்சு இலாகாவுக்ும் இங்கிலீஷ் இலாகாவுக்கும் வியாபாரத்திலுைம் கலியாணம் முதலிய விடயத்திலுைம் ஒன்றுக்கொன்று சம்பந்தப்பட்டிருப்ப தினல் இங்கிலீஷ் பாஷையைக் கற்கவேண்டியது அத்தியாவசி யகமே.

3. இப்பெயர் பூண்ட பாடசாலையில் இங்கிலீஷ் தமிழ் முதலிய பாஷைகள் வெகு சிரத்தையாகக் கற்பிக்கப்படும்.

4. ஞாயிற்றுக்கிழமை நீங்கலாக மற்ற தினங்களில் காலை 8–மணி முதல் 1.-மணி வரையிலும், பிற்பகல் 2-மணி முதல் 5-மணி வரையிலும், இரவு 6-மணி முதல் 8-30 மணி வரையிலும் கிளாசுகள் நடத்தப்படும்.

5. பிள்ளைகட்கு எவ்வளவு படிப்பு வருமோ அதன்மேல் சம்பளம் விதிக்கப்படும்.

6. (25) பிள்ளைகட்கு அதிகமாகில் உதவி "உபாத்தி மார்களை" வைத்து நடத்தப்படும்.

7. இப்பாடசாலை தேர்ச்சியைப் பற்றி சில மேலதிகாரி களால் கண்காணிக்கப்படும்.

8. இதற்கு முன்பு நான் "அண்ணுமலை ஈசுவரன்" கோவிலுக்கு இடது பாரிசத்திலிருக்கும் "ஹிந்து மிடில் ஸ்கூலில்" டிப்டி மானேஜராக இருந்து 6 வருடமாய் வெகு சிரத்தையாகப் பிள்ளைகள் விடயத்தில் கவனித்து வித்தியாப் பியாசம் செய்வித்து வந்ததும், என் முயற்சியினுலேயே மேற் படி பாடசாலை விருத்திக்கு வந்ததும், யாவருக்கும் தெரிந்த விடயமே. அப்பாடசாலையில் கிறிஸ்துமார்க்க புத்தகங் களைப் பாடம்வைத்து நடத்த மானேஜர் எண்ணம் கொண் டதை யானறிந்து பலவாருய் தடுத்தும் கேளாததினுல் அம் மானேஜருக்கும் எனக்கும் மனஸ்தாப முண்டாகி "ஹிந்து ரிலிஜியஸ் ஸ்கூல்" என்னும் பாடசாலையொன்று நான் பிரத்

தியேகமாய் ஸ்தாபித்து நடத்திவருவதால் இவ்வூரிலுள்ள கனதனவான்களும், அன்னியதேசத்து கனதனவான்கள் யாவரும் இப்பாடசாலை விருத்தியடையும்படி முயற்சிக்க அவர்களின் மேலான கனத்தைக் கோருகின்றேன்.

9. இங்கிலீஷ் புத்தகங்கள் சர்க்கார் பதிப்பாகவும், தமிழ்ப் புத்தகங்கள் நாவலர் பதிப்பாகவும் உள்ளவைகளை வரவழைத்துப் பாடம் வைத்து நடத்தி வருகிறேன்.

10. எளிய பிள்ளைகட்குச் சம்பளமில்லாமலும் புத்தக முதலானவைகளும் தருமத்துக்கு வாங்கிக் கொடுத்து நடத்தப்படும்.

இவ்விளம்பரத்தை ஏனைய பத்திராதிபர்கள் தங்கள் தங்கள் பத்திரிகா ரத்தினங்களில் பிரசுரிக்கும்படி மிக நமஸ்கரித்தேன்.

இங்ஙனம்
ஊழியன்

தி. ச. இராஜகோபால பிள்ளை,
மானேஜர்,
இராஜகோபால ஹிந்து, ரிலிஜியஸ் பாடசாலை.

[ஆறுமுக நாவலருக்குப் பிறகு சமயச் சொற்பொழிவாற்றுவதில் மிகச் சிறந்து விளங்கிய மூவருள், சூளை சோமசுந்தர நாயகரும் ஒருவர். அவர், வைணவ மதத்தையும், வைணவப் பெரியார்களையும் கடுமையாகக் கண்டித்தெழுதியும் பேசியும் வந்தவர்.

அவர், தாம் எழுதிய பாஞ்சராத்திர மதசபேடிகை அல்லது சைவ சூளாமணி எனும் நூலில், புதுவை இராமாநுச நாவலரவர்களை 'அவுசாரி மகன்' என்று இழிவாகக் குறிப்பிட்டு எழுதியதால், நாவலர் அவர்மீது சென்னைப் பட்டணம் பிரசிடென்சி மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் வழக்குத் தொடுத்தார்.

புதுவை இராமாநுச நாவலவர்கள் சூளை சோமசுந்தர நாயகரவர்கள் மீது கொண்டுவந்த அவதூறு வழக்கானது, 1891-ம் ஆண்டு ஜனவரித் திங்கள் 8-ஆம் நாள் சென்னை மாஜிஸ்ட்ரேட் மிஸ்டர்-மாஸ்கல்துரை அவர்கள் முன் விசாரணைக்கு வந்தபோது, நாவலவர்களுக்காக மிஸ்டர்-அட்டர்ணி பி. திருவேங்கடசாமி பிள்ளையவர்களும், பாரிஸ்டர்-மிஸ்டர் ராபர்ட் கிராண்ட் துரையவர்களும்; நாயகரவர்களுக்காக மிஸ்டர்-அட்டர்ணி எம். இ. அப்பாதுரை முதலியாரவர்களும், பாரிஸ்டர்-மிஸ்டர் ராமசாமி ராஜு அவர்களும் ஆஜரானதோடு, நாவலவர்களைத் தூஷித்த 'அவுசாரி மகன்' என்னும் பதத்திற்கு, நாவலரவர்கள் கொண்ட அர்த்தமே சரியெனக் கூற ராமாயணப் பிரசங்கி பிரம்மஸ்ரீ. ப. கிருஷ்ண சாஸ்திரியார் அவர்களும், இன்னும் சில வித்துவான்களும்; நாயகரவர்கள் எழுதிய பதத்திற்கு நாவலர் கொண்ட அர்த்தம் அதுவல்ல என்பதற்கு தாமோதரம் பிள்ளை அவர்களும், நார்மல் ஸ்கூல்-வேலுப் பிள்ளை அவர்கள் முதலிய வித்துவான்களும், சகாயமாக வந்திருந்தார்கள்.

நாயகர் கோர்ட்டில் வந்த பிறகு, அழகிய மண வாள ராமாநுச ஏகாங்கி சுவாமிகளுக்கும், சாட்சி சம்மன் கொடுப்பித்தார்கள். சில சைவ, வைண வர்களும் வந்திருந்தார்கள்.

மாஜிஸ்ட்டிரேட், நாயகரவர்களை நோக்கி "சமாதானமாகப் போகிறதாய்ச் சொன்னீரே! இன்னும் சமாதானமாகவில்லையா? இதற்குத்தானோ நீர் எனக்கு அர்த்தம் தனியாய்ச் சொல்லிவைத் தீர். புத்தகத்தில் நீர் எழுதினதே தவறு, ஒருமணி நேரத்திற்குள் சமாதானம் ஆகாவிட்டால் கேஸ் விசாரிக்கப்படும்" எனக் கூறவே, அங்கு ஒரு தனி யறையில் அட்டர்ணிகள் இருவரும், நாயகரவர்களை யும், நாவலவர்களையும் அழைப்பித்து, நாயகரிடம் மன்னிப்புப் பத்திரம் வாங்கி மாஜிஸ்ட்ரேட் அவர் களிடம் கொடுக்க, அவர் நாயகரைப் பார்த்து "நீர் மன்னிப்புப் பத்திரம் எழுதிக் கொடுத்த தாலும் நாவலர் ஒப்புக் கொண்டதாலும் வழக்கை விசாரிக்கவில்லை. இனிமேல் நீர் இவ்விதம் எழுதக் கூடாது, எச்சரிக்கையாய் இரும்." என்று அச் சுறுத்தி அனுப்பினாராம்.]

## சூளை சோமசுந்தர நாயகரின்

# மன்னிப்புக் கடிதம்

MADRAS, 8th JANUARY 1891.

### ஏ. வே இராமாநுஜ நாவலரவர்களுக்கு

ஐயா,

சென்னப்பட்டணம் டவுன் பிரசிடென்ட் மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் தாங்கள் என்பேரில் கொண்டுவந்த 1890 ஹு காலண்டர் 22349-வது நெ. பிரியாதில் நான் அச்சிட்டுப் பிர சுரஞ் செய்த பாஞ்சராத்திர மத சபேடிகை அல்லது சைவ

சூளாமணி யென்னும் புத்தகத்தில் தங்களைப் பற்றியும், 97-வது பேஜில் அவிசாரி மகன் என்று சொல்லியிருப்பதைப் பற்றியும் நான் அச்சிட்டுப் பிரசுரஞ் செய்திருக்கும் மற்றுஞ் சில புத்தகங்களிலும் வைஷ்ணவர்களைப்பற்றி நான் தூஷணையால் எழுதி யிருப்பதைப் பற்றியும், நான் அதிக வியசனப் படுவதுடன் அதைப்பற்றி யென்னை மன்னிக்கும்படி தங்களை ரொம்பவும் வேண்டிக் கேட்டுக் கொள்ளுகிறேன். இனிமேல் தங்களையாவது, வைஷ்ணவர்களையாவது அவர்கள் ஆசாரியர்களையாவது நான் அவதூறாய்ப் பேசமாட்டேன், எழுதவுமாட்டேன். தங்களுக்கு மேற்படி வியாச்சியத்தில் நேரிட்ட செலவுக்காகவும் மானநஷ்டத்துக்காகவும் நாளது தேதியில் தங்களுக்கு ரூபா (100) நூறு செலுத்தியிருக்கிறேன். இந்தக் கடிதத்தைத் தங்களிஷ்ட பிரகாரம் (NEWS PAPERS)களில் பிரசுரஞ் செய்து கொள்ளலாம். இனிமேல் தங்களுக்கும் எனக்கும் இவ்விஷயத்தில் சிவிலிலாவது கிரிமினலிலாவது யாதொரு வியவகாரமும் நடத்தக்கூடாது. இப்படிக்கு நான் என் மனோராஜியில் எழுதிக் கொடுத்த APOLOGY அல்லது மன்னிப்புப் பத்திரம்.

இப்படிக்கு.

(Sd.) சூ **சோமசுந்தர நாயகர்.**

**சாக்ஷிகள் :**

(Sd) APPADORAI MUDALIAR,
ATTORNEY For S. Somasundara Naigar.

(Sd) P. TIRUVENGADASWAMI PILLAI,
ATTORNEY For A. V. Ramanuja Navalar,
Complainant.

இந்த அபாலஜி பத்திரத்தையும் இதில் கண்ட ரூபா 100-ம் பெற்றுக் கொண்டேன்.

1891 ௵
ஜனவரி ௴ 8௳ (Sd) ஏ. **வே. ராமாநுஜ நாவலர்.**

[தென்னார்க்காடு மாவட்டத்திலுள்ள திண்டிவனத்தில் 1852-ல் தோன்றி 1897–ல் மறைந்த மாமேதையும், பன்மொழிப் புலவரும்; பாரிஸ்டருமாகிய ப. வ. இராமசாமி ராஜூ என்பவர்,

**"ஒருமைப்பா டென்னுமோர் உசிதவழக்கந் தன்னை**
**ஒருகாலும் அறியாரே அண்ணே**
**பெருமை குலைந்ததனால் புறத்தார்க்குக் கீழ்ப்பட்ட**
**பேதமை அறியீரோ அண்ணே."**

என்னும் இந்த அடிகளையும், இன்னும் பல அடிகளையும் கொண்ட தேசியப் பாடலொன்றை 99-ஆண்டுகளுக்கு முன்பே பாடியிருக்கிறார். 1877-ஆம் ஆண்டில் இப்பாடலை இக்கவிஞர் எழுதியிருப்பதிலிருந்து, தமிழகத்தில் தோன்றிய முதல் தேசியக் கவிஞர் இவரே என்பதை எவரும் மறுக்கமுடியாது.

தேசியக் கவிஞர்களுள் பாரிஸ்டர் இராமசாமி ராஜூ என்பவர் ஒரு பல்லவியைப் போன்றவர் என்றால், அடுத்த நிலையிலுள்ள பாரதியார் ஓர் அநுபல்லவியைப் போன்றவர். சேலம் அர்த்தநாரீஸ்வர வர்மாவும், கோவை குழந்தை தாசும், மதுரை பாஸ்கர தாசும், பழனி வேலுசாமிக் கவியும் சரணத்தைப் போன்றவர்கள்.

இந்தப் பட்டியலில், பாரதியைத் தவிர மற்றவர்கள் மறைக்கப்பட்டு விட்டார்கள். அதனால், அவர்களின் பெயர்களைக் கூட மக்கள் மறந்துபோய் விட்டனர்.

பெருந்தலைவர் காமராஜ் அவர்களின் மிக நெருங்கி நண்பரும், தலையங்கம் எழுதுவதில் தலைசிறந்து விளங்கியவரும் 1934-ஆம் ஆண்டிருந்து

1943-ஆம் ஆண்டுவரையில் தினமணி ஆசிரியராக இருந்து பணியாற்றியவருமாகிய காலஞ்சென்ற சொக்கலிங்கம் அவர்கள், பாரதியின் கவிதைகளில் மிகவும் ஈடுபாடுடையவர்.

ஆகவே, பாட்டுக்கொரு புலவனுகிய பாரதியின் பாடல்கள், பட்டி தொட்டி எங்கும் பரவ வேண்டும் என்பதற்காக, அவரும் அவருடைய நண்பர்களும் எடுத்துக் கொண்ட பெரு முயற்சியின் விளக்கமாக இவ்வேண்டுகோள் அமைந்திருக்கிறது ]

## டி. எஸ். சொக்கலிங்கத்தின்

# வேண்டுகோள்

பாரதியார் காலஞ்சென்று 10 வருஷங்களாகின்றன. தமிழர் இன்னம் தூக்கத்திலிருந்து விழிக்கவில்லை. இது பெரிய ஆச்சரியமல்லவா? இலக்கியம் வளராமல் வாழ்வு உயராது. ஊக்கமும் உணர்ச்சியுமுள்ள வாலிபர்கள், இதற்காகப் பாடுபட வேண்டுமென்று எத்தனையோ வருஷங்களாகச் சொல்லி வருகிறுர்கள். ஆனுல் ஒன்றும் நடக்கவில்லை.

கடலூர் ஜெயிலில் இருந்தபோது, இந்த வேலைக்காக ''தமிழ்ப் பிரசுராலயம்'' என்ற பெயருடன் அங்கிருந்த தேச பக்தர்கள் ஒரு கம்பெனி ஏற்படுத்தினுர்கள். அந்தக் கம்பெனிக்கு நாமக்கல் ஸ்ரீ. வெங்கடாசல ரெட்டியாரைத் தலைவராகவும், ஸ்ரீமான்கள் கே. சந்தானம், டி. எஸ். அவினுசிலிங்கம், டாக்டர் சாஸ்திரி, பி. எஸ். குமாரசாமி ராஜா, என். எம். ஆர். சுப்பராமன் இவர்களை டைரக்டர்களாகவும், என்னை மானேஜிங் டைரக்டராகவும் நியமித்தார்கள். விடுதலையடைந்த பின்பு நான் எவ்வளவோ முயற்சி செய்தும், ஜெயிலில் தீர்மானித்த விஷயம் இன்னம் உருப்படியாகவில்லை. தமிழரின் துரதிஷ்டமென்றே இதைச் சொல்ல வேண்டும்.

பம்பாய் பிரீபிரஸ் ஜர்னலின் ஆசிரியராயிருந்து மிகத் திறமையாக நடத்திப் பெயர் பெற்றவரும், பம்பாய் காங்கிரஸ் இயக்கத்தை நடத்தியதாகக் குற்றஞ்சாட்டப்பட்டு ஒருவருட தண்டனை யடைந்தவருமான நண்பர் கே. சீனிவாசன் சென்ற மாதம் 22உ நாசிக் சிறையிலிருந்து விடுதலை யடைந்து விட்டார்.

தமிழ் இலக்கிய வளர்ச்சிக்காகப் பாடுபட வேண்டுமென்று ஆர்வங்கொண்ட தமிழ் மணிகளில் அவர் ஒருவர். அவர் ஜெயிலுக்குப் போகுமுன்பே, விடுதலையடைந்ததும் இந்தத் துறையில் வேலை செய்யவேண்டுமென்று கடலூர் ஜெயிலில் என்னைக் கண்டு சொல்லிப்போனார். அந்த மாதிரியே இப்பொழுது செய்ய விரும்புவதாக டெல்லியிலிருந்து கடிதம் எழுதியிருக்கிறார். இதைத் தமிழ்நாட்டின் அதிர்ஷ்டம் என்று கருதுகிறேன்.

நண்பர் வ. ராமசாமி ஐயங்கார் பகலிலும் இரவிலும் இலக்கியத்தைப் பற்றியே பேசுகிறார். சுவாசம் விடும் போதும் இலக்கியந்தான். இலக்கிய சுவாசத்தையே ஜீவனாகக் கருதித் துள்ளி ஓடுகிறார். சென்னையில் அவர் வந்து இருந்துகொண்டு வாலிபத் தமிழருக்கு இலக்கிய "இஞ்சக்ஷன்" செய்த வண்ணமா யிருக்கிறார். சீனிவாசன் வரவும், ஐயங்கார் "இஞ்சக்ஷனும்" இலக்கிய சூரியன் உதயமாகும் அறிகுறிகளோ என்று ஆனந்த மடைகிறேன். தமிழரே, இதுவரை தூங்கியது போதும். இனியாவது விழியுங்கள். மற்ற பாஷைகள் எவ்வளவு முன்னேற்ற மடைந்திருக்கின்றன என்பதைச் சிந்தியுங்கள்.

சீக்கிரமாகத் தமிழ்வளர்ச்சியில் சிரத்தை கொண்டவர்கள் கூடி யோசித்து, தீவிரமாக வேலை ஆரம்பிக்க முயற்சி நடக்கிறது. கடலூர் ஜெயிலில் கையெழுத்திட்ட நண்பர்களும், ஆவல்கொண்ட மற்றவர்களும் உடனே தங்கள் அபிப்பிராயங்களை எனக்கு எழுதும்படி பணிவுடன் வேண்டிக் கொள்ளுகிறேன்.

டி. எஸ். சொக்கலிங்கம்.
(9—7—1933)